 



# இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்

## க.பொ.த. (சாதாரண தர)ப் பரீட்சை - 2021 (2022)

## 33 - வரலாறு

### புள்ளியிடும் திட்டம்



இது விடைத்தாள் பரீட்சகர்களின் உபயோகத்துக்காகத் தயாரிக்கப்பட்டது. பிரதம பரீட்சகர்களின் கலந்துரையாடல் நடைபெறும் சந்தர்ப்பத்தில் பரிமாறிக்கொள்ளும் கருத்துக்களுக்கிணங்க, இதில் உள்ள சில விடயங்கள் மாறலாம்.

இறுதித் திருத்தங்கள் உள்ளடக்கப்படவுள்ளன.

**33 T I**

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2021(2022)
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2021(2022)
General Certificate of Education (Ord. Level) Examination, 2021(2022)

ඉතිහාසය I
வரலாறு I
History I

පැය එකයි
ஒரு மணித்தியாலம்
One hour

**அறிவுறுத்தல்கள் :**

* எல்லா வினாக்களுக்கும் விடை எழுதுக. இவ்வினாத்தாளுக்கு **80** புள்ளிகள் வழங்கப்படும்.
* **1** தொடக்கம் **40** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் (1), (2), (3), (4) என இலக்கமிடப்பட்ட விடைகளில் சரியான அல்லது மிகப் பொருத்தமான விடையைத் தெரிவுசெய்க.
* உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் உமது விடையின் இலக்கத்தை ஒத்த வட்டத்தினுள்ளே புள்ளடியை (X) இடுக.
* அவ்விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள மற்றைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்து, அவற்றைப் பின்பற்றுக.

**1.** இலங்கையின் வரலாறு பற்றிய தகவல்களைப் பெறக்கூடிய புராதன இலக்கிய மூலாதாரம்
(1) மகாவம்சம் (2) தீபவம்சம் (3) தாதுவம்சம் (4) தூபவம்சம்

**2.** கற்பாறைகளிலே எழுதப்பட்ட சாசனம் எப்பெயரால் குறிப்பிடப்படுகின்றது?
(1) பாறைக் கல்வெட்டு (2) குகைக் கல்வெட்டு
(3) தூண் கல்வெட்டு (4) சுவர்க் கல்வெட்டு

**3.** புராதன பிராமி கல்வெட்டில் 'புரகமத்த' என்ற பெயரால் குறிப்பிடப்பட்ட அதிகாரி நகரத்தின்
(1) நிர்வாகத்துக்குப் பொறுப்பாக இருந்த நபராவார்.
(2) பிரதான பாதுகாப்பு அதிகாரியாவார்.
(3) வர்த்தக நடவடிக்கைகளுக்குப் பொறுப்பான அதிகாரியாவார்.
(4) பிரதான கட்டிடக் கலைஞராவார்.

**4.** வரலாற்றுக்கு முந்திய மனிதன் வசித்ததாகக் கருதப்படும் இடங்களில் மிகவும் பழமையான இடங்கள்
(1) கித்துள்கல பெலிலேன, பெல்லன்பதிபெலஸ்ஸ
(2) பாஹியன்கல, குருவிற்ற பட்டதொம்பலன்ன
(3) அத்தனகொட அலுலென, மானியம்கம
(4) சீகிரிய பொத்தான, சீகிரிய அலிகல

**5.** அரசுரிமை தந்தைக்குப் பின்னர் மகனுக்கு உரித்தான சந்தர்ப்பம்
(1) தேவநம்பியதீச மன்னனின் பின்னர் உத்திய அரசனாகுதல்
(2) காவந்திஸ்ஸ மன்னனுக்குப் பின்னர் துட்டகைமுனு அரசனாகுதல்
(3) முதலாம் விஜயபாகு மன்னனுக்குப் பின்னர் முதலாம் பராக்கிரமபாகு அரசனாகுதல்
(4) முதலாம் விமலதர்ம சூரிய மன்னனின் பின்னர் செனரத் அரசனாகுதல்

**6.** நிஸ்ஸங்கமல்ல மன்னனால் பயன்படுத்தப்பட்ட அரசு பற்றிய கோட்பாடு எது?
(1) ஆண்டவன் (2) சக்கரவர்த்தி (3) போதிசத்துவர் (4) மலையின் அரசன்

**7.** கற்குகைகளை வசிப்பிடமாக அமைக்கும்போது பாறைமேல் விழும் மழைநீர் குகையினுள் வழிவதைத் தடுப்பதற்குப் பின்பற்றப்பட்ட செயற்பாடு எது?
(1) கற்குகையின் உட்பகுதியைத் தோண்டுதல்
(2) குகையைச் சுற்றி மண்ணால் சுவர் கட்டுதல்
(3) குகையினுள் பீலிகளை அமைத்தல்
(4) கற்களால் குகையை மூடிவிடுதல்

**8.** புனித தந்ததாதுவுடன் ஹேமமாலி இளவரசியும் தந்த இளவரசனும் கரையேறிய கப்பல் தரிப்பிடம் எது?
(1) மாதோட்டம் (2) கோகண்ணதித்த
(3) தம்பகொலமட்டுன (4) லங்காப்பட்டினம்

**9.** அலைதாங்கியினால் நிறைவேற்றப்படும் பணி
(1) குளக்கட்டு அரிப்புறுவதைத் தடுப்பதாகும்.
(2) மடைக்கதவில் ஏற்படும் அமுக்கத்தைக் கட்டுப்படுத்துவதாகும்.
(3) குளத்தின் மேலதிக நீரை வெளியேற்றுவதாகும்.
(4) குளத்தில் சேரும் சேறு கால்வாய்களுக்குச் செல்வதைத் தவிர்ப்பதாகும்.

**10.** அம்பன் கங்கையை மறித்துக் கட்டப்பட்ட கால்வாய்
(1) யோதஎல கால்வாய் (2) மினிப்பே கால்வாய்
(3) அங்கமிடில்ல கால்வாய் (4) எலஹற கால்வாய்

**11.** பின்வரும் A-D வரையிலான ஆக்கங்களில் புராதன இலங்கையின் விஞ்ஞானம் தொழினுட்பம் என்பவற்றைப் பயன்படுத்துவதில் முதிர்ச்சியடைந்த சந்தர்ப்பங்களுக்கான உதாரணங்களைக் கொண்ட விடை எது?
A - களிமண் ஓடக் கல்லறை
B - சீகிரியாவின் நீர்ப்பூங்கா
C - நிறந்தீட்டப்பட்ட மட்பாண்டங்கள்
D - குட்டம் பொய்கை
(1) A, C (2) B, C (3) B, D (4) C, D

**12.** இயற்கைச் சூழல் செயன்முறை பற்றிய அறிவினை தொழினுட்பத்துக்காகப் பயன்படுத்திய சந்தர்ப்பம்
(1) ருவன்வெலிசாயவின் அத்திவாரத்தைத் தயார்ப்படுத்தியமை
(2) மல்வத்து ஓயாவுக்குக் குறுக்கே கல்லாலான பாலம் ஒன்றைக் கட்டியமை
(3) பலாங்கொடை சமனலவெவ பிரதேசத்தில் இரும்பு உருக்கும் உலையினைத் தயாரித்தமை
(4) தெடிகம கொட்டவிகாரைக் கைவிளக்கினை உருவாக்கியமை

**13.** பின்வருவனவற்றுள் 'தக்கபதி' என்ற பெயருடைய வரி எதற்காக வசூலிக்கப்பட்டது?
(1) சேனைப் பயிர்ச்செய்கைக்கு
(2) குளத்து நீரைப் பயன்படுத்துவதற்கு
(3) அரசனுக்குச் சொந்தமான நிலங்களில் பயிர்செய்வதற்கு
(4) வாய்க்கால்களில் மீன் பிடிப்பதற்கு

**14.** பின்வருவனவற்றுள் புராதன இலங்கையில் உள்நாட்டு வர்த்தகம் பற்றிய சட்டங்கள் அடங்கிய கல்வெட்டு எது?
(1) சொரபொரவெவக் கல்வெட்டு (2) மிகிந்தலை சுவர் கல்வெட்டு
(3) வேவல் கெட்டிய கல்வெட்டு (4) கொடவாய கல்வெட்டு

**15.** உயர் நிலங்களில் உள்ள காடுகளை அழிக்கக்கூடாதென சட்டம் விதித்ததின் மூலம் புராதன மன்னர்கள் எதிர்பார்த்தது
(1) இயற்கை நீர்நிலைகள் வற்றிப்போவதைத் தடுத்தலாகும்.
(2) குளங்களில் மண்படிவதைத் தடுத்தலாகும்.
(3) காட்டு விலங்குகளின் இருப்பிடங்களைப் பாதுகாத்தலாகும்.
(4) பயிர்செய் நிலங்களில் மண் வளமற்றுப் போவதைத் தவிர்த்தலாகும்.

**16.** பின்வரும் எந்த அரசன் ஆட்சிக்காலத்தில் ஜோதிய செட்டியின் கலகம் ஏற்பட்டது?
(1) முதலாம் விஜயபாகு (2) முதலாம் பராக்கிரமபாகு
(3) ஆறாம் பராக்கிரமபாகு (4) ஆறாம் விஜயபாகு

**17.** கண்டி இராச்சியத்தில் நிலம் அவற்றின் உரிமை அனுபவித்தல் என்பவற்றை அடிப்படையாகக் கொண்டு பிரிக்கப்பட்ட பிரிவுகள் நிரல் **I** இலும் அந்தப் பிரிவுகள் பற்றிய விளக்கம் நிரல் **II** இலும் குறிப்பிடப்பட்டுள்ளன. நிரல் **I** இற்கு அமைய நிரல் **II** இனைப் பொருத்தும்போது வரும் சரியான விடை எது?

| நிரல் I | நிரல் II |
|---|---|
| 1. கபடாகம் | A - ரதல பிரதானிகளின் சேவைக்காக வழங்கப்பட்ட நிலம் |
| 2. நிந்தகம் | B - விகாரைகளுக்கு தானம் அளிக்கப்பட்ட நிலம் |
| 3. விகாரகம் | C - அரச மாளிகைக்காகப் பயன்படுத்தப்பட்ட நிலம் |
| | D - தேவாலயங்களுக்கு தானமளிக்கப்பட்ட நிலம் |

(1) A C D (2) B D A (3) C A B (4) C B D

**18.** போர்த்துக்கேயர் இந்நாட்டுக்கு வருகை தந்தபோது யாழ்ப்பாணப் பிரதேசத்தின் ஆட்சியாளன்
(1) பரராஜசேகரம் (2) எதிர்மன்னசிங்கம் (3) சங்கிலி (4) புவிராஜபண்டாரம்

**19.** கி. பி. 1848 சுதந்திரப் போராட்டத்தின் பின்னர் நாட்டு மக்களுக்கு நிவாரணம் வழங்குவதற்கு பிரித்தானிய அரசாங்கம் எடுத்த நடவடிக்கை
(1) கைதுசெய்யப்பட்ட தேசிய தலைவர்களை விடுதலை செய்தமை.
(2) கட்டாய சேவை இராஜகாரிய முறை நீக்கப்பட்டமை.
(3) விவசாய மக்களின் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கு குழு ஒன்றை நியமித்தமை.
(4) வரிகள் சிலவற்றை நீக்கியமை.

**20.** 1972 அரசியல் சீர்திருத்தத்தின்படி பிரதிநிதிகள் சபைக்கு வழங்கப்பட்ட பெயர் யாது?
(1) சட்டவாக்கக் கழகம் (2) அரசுக்கழகம்
(3) தேசிய அரசுப் பேரவை (4) செனற் சபை

**21.** பௌத்த சமய மறுமலர்ச்சிக்கு அநாகரிக தர்மபால வழங்கிய பங்களிப்பு
(1) பௌத்த புனித தலங்களைப் பாதுகாக்க நடவடிக்கை எடுத்தமை
(2) பௌத்த கொடியை உருவாக்கியமை
(3) ஐம்பெரும் விவாதங்களுக்கு அனுசரணை வழங்கியமை
(4) வெசாக் பூரணை தினத்தை விடுமுறை தினமாக்குவதற்கு நடவடிக்கை எடுத்தமை

**22.** ஆறுமுக நாவலரினால் யாழ்ப்பாணத்தில் சைவ ஆங்கில வித்தியாசாலை ஆரம்பிக்கப்பட்டதன் பிரதான நோக்கம்
(1) இந்து கலாசாரத்தைத் தமிழ் மாணவர்களிடையே பரப்புதல்
(2) திறமையுள்ள தமிழ் மாணவர்களுக்கு இலவசக் கல்வியை வழங்குதல்
(3) தமிழ் மொழியில் கல்வி பெறுவதற்கு ஒரு பாடசாலையை நிறுவுதல்
(4) தமிழ் மாணவர்களிடையே ஆங்கிலக் கல்வியைப் பரப்புதல்

**23.** இஸ்லாம் சமய மறுமலர்ச்சிக்கு டி. பி. ஜாயா அவர்கள் செய்த சேவைகளில் ஒன்று
(1) முஸ்லிம் நேசன் செய்திப் பத்திரிகையை ஆரம்பித்தமை
(2) முஸ்லிம் மக்களுக்காகப் பாடசாலைகளைத் தாபித்தமை
(3) முஸ்லிம் பெண்கள் கல்லூரிகளை ஆரம்பித்தமை
(4) கொழும்பு முஸ்லிம் கல்விச் சபையைத் தாபித்தமை

**24.** சூரியமல் இயக்கம் தொடர்பான சரியான கூற்று எது?
(1) முதலாம் உலகப்போரில், அங்கவீனமுற்ற பிரித்தானிய படைவீரர்களுக்கு நிதி சேகரிப்பதற்கான இயக்கமாகும்
(2) இலங்கையில் சுதந்திரத்துக்காக மேற்கொள்ளப்பட்ட ஆர்ப்பாட்டங்களுக்கான பிரச்சார இயக்கமாகும்
(3) போர் முடிவுற்ற தினத்தைக் கொண்டாடுவதற்காக சூரியகாந்தி மலரை விற்கும் இயக்கம் ஆரம்பமானது
(4) சூரியகாந்திப்பூவை விற்பனை செய்வதால் கிடைக்கும் பணத்தை பிரித்தானிய திறைசேரிக்கு அனுப்புவதற்கு நடவடிக்கை எடுக்கப்பட்டது.

25. டொனமூர் அரசியல் யாப்பின் மூலம் அறிமுகப்படுத்தப்பட்ட அம்சங்களில் ஒன்று
(1) பிரதேசவாரிப் பிரதிநிதித்துவம்
(2) பாராளுமன்ற அரசியல் முறை
(3) சர்வசன வாக்குரிமை
(4) மலைநாடும் தாழ்நிலப் பிரதேசமும் ஒன்றிணைக்கப்பட்ட நிர்வாகம்

26. பின்வரும் A - D வரையான விடயங்களில் பிரித்தானியர் ஆட்சி காரணமாக இலங்கையில் ஏற்பட்ட பொருளாதார மாற்றங்களை மாத்திரம் கொண்டுள்ள விடையினைத் தெரிவுசெய்க.
A - ஏற்றுமதிக்கான பெருந்தோட்டப் பயிர்களின் அறிமுகம்
B - விவசாய விருத்தி அரசாங்கத்தின் முக்கிய பொறுப்பாகியது
C - நில உரிமையற்ற விவசாய மக்கள் தோன்றுதல்
D - உழைப்பு அரச சேவை முறை அமுலாக்கப்படுதல்
(1) A, B (2) A, C (3) B, D (4) C, D

27. மகாவலி அபிவிருத்தித் திட்டத்தின் நோக்கங்களில் ஒன்று
(1) வரண்ட வலயத்தில் புராதன குளங்களையும் நீர்ப்பாசனக் கால்வாய்களையும் புனரமைப்புச் செய்தல்
(2) விவசாய உற்பத்திப் பொருளை விற்பனை செய்வதற்கு வர்த்தக மத்திய நிலையங்களைத் தாபித்தல்
(3) அதிகரித்துச் செல்லும் மின்சாரத்தின் கேள்வியை ஈடுசெய்ய மின்சாரத்தை உற்பத்தி செய்தல்
(4) சிறு ஏற்றுமதிப் பயிர்களைப் பயிரிடுவதற்கு காணிகளை ஒதுக்குதல்

28. பின்வரும் A தொடக்கம் D வரையான தேர்தல்களில் முழு இலங்கையும் ஒரு தேர்தல் தொகுதியாகும் சந்தர்ப்பங்களைக் குறிப்பிடும் தெரிவு எது?
A - ஜனாதிபதித் தேர்தல்
B - பொதுத் தேர்தல்
C - மாகாணசபைத் தேர்தல்
D - பொதுசன அபிப்பிராய தேர்தல்
(1) A, B (2) A, D (3) B, C (4) C, D

29. மறுமலர்ச்சிக் காலத்தில் பல்வேறு கண்டுபிடிப்புக்களைச் செய்த தனிநபர்களில் ஆங்கிலேய இனத்தவரான வில்லியம் ஹார்வே எத்துறையில் புகழ்பெற்றிருந்தார்?
(1) சித்திரக்கலை
(2) வைத்தியத் துறை
(3) இலக்கியம்
(4) நாடுகாண் பயணங்கள்

30. மறுமலர்ச்சிக் காலத்தில் கலைத்துறையில் ஏற்பட்ட மாற்றத்தைக் குறிப்பிடுவது
(1) உலகியல் இரசனையை முதன்மையாகக். கொண்ட கலைப்படைப்புக்கள் தோன்றியமை
(2) கலைஞர்களின் வகுப்பு ரீதியான பெயரினைக் கலைப்படைப்புகள் கொண்டிருந்தமை.
(3) கலைப்படைப்புக்கு அனுசரணை வழங்கும் பலம் தேவாலயங்களுக்கு மட்டுப்படுத்தப்பட்டிருந்தமை
(4) கலைப்படைப்புக்கள் சமயத்துடன் மட்டுமே சார்ந்திருந்தமை

31. கைத்தொழிற் புரட்சிக் காலத்தில் பிரித்தானியாவில் நில அடைப்பு இயக்கம் மூலமாக இடம்பெற்றது
(1) பெரிய நிலங்கள் சிறு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு வேறாக்கப்பட்டமை
(2) ஏழைகளுக்குச் சொந்தமான நிலங்கள் பிரபுக்களால் கைப்பற்றப்பட்டமை
(3) கைத்தொழில் நடவடிக்கைகளுக்காக கிராமிய நிலங்கள் பயன்படுத்தப்பட்டமை
(4) சிறு விவசாயிகளுக்கு உரித்தான சிறிய நிலங்கள் ஒன்று சேர்க்கப்பட்டு பெரிய விவசாயப் பண்ணைகள் உருவாக்கப்பட்டமை

32. கீழே தரப்பட்டுள்ள கருத்துகள் உள்ளடங்கிய அரசியல் தத்துவம் உலகம் முழுவதும் எந்தப் புரட்சியின் பின்னர் பரவியது?
- சமுதாயத்துக்கு உரித்தான செல்வம் தொடர்பான பொது உரிமையை ஏற்றுக்கொள்ளுதல்
- அனைத்துக் குடிமக்களுக்கும் தமது திறன்களை மேம்படுத்திக்கொள்ள சமமான சந்தர்ப்பம் வழங்குதல்
- உற்பத்தியின் பயனை அனைவருக்கும் பகிர்ந்தளித்தல்

(1) அமெரிக்க சுதந்திரப் போர்
(2) பிரான்சியப் புரட்சி
(3) ரஷ்யப் புரட்சி
(4) ஆங்கிலப் புரட்சி

33. இரண்டாம் உலக மகா யுத்த காலத்தில் ஏனைய ஆசிய நாடுகளை ஆக்கிரமித்த ஆசிய நாடு
(1) ஜப்பான்
(2) சீனா
(3) மொங்கோலியா
(4) கொரியா

**34.** ஐக்கிய நாடுகள் சபையின் நிறுவகங்களுக்கு உரிய செயற்பாடுகள் சில கீழே தரப்பட்டுள்ளன. இவற்றில் பொதுச் சபைக்கு உரிய செயற்பாடுகளைக் குறிப்பிடுவது

A - ஐக்கிய நாடுகள் சபையின் சர்வதேச நம்பிக்கை பொறுப்பின் கீழ் கொண்டு வரப்பட்ட பிரதேசங்களை நிர்வகித்தல்

B - ஐக்கிய நாடுகள் சபைக்கு புதிய அங்கத்துவ நாடுகளைச் சேர்த்துக் கொள்ளுதல்

C - ஐக்கிய நாடுகள் சபையின் நிறுவகங்களுக்குத் தேவையான சட்ட ஆலோசனைகளை வழங்குதல்

D - பாதுகாப்புச் சபையின் சிபாரிசின்படி செயலாளர் நாயகத்தைத் தெரிவுசெய்தல்

(1) A, C (2) A, D (3) B, C (4) B, D

- பின்வரும் அட்டவணையில் A தொடக்கம் J வரையிலான தகவல்களைக் கொண்டு **35, 36** ஆகிய வினாக்களுக்கு விடை தருக.

| மன்னன் | இடம் | படைத் தளபதி |
|---|---|---|
| A. முதலாம் இராஜசிங்கன் | D. கன்னொறுவ | G. ஜெரனிமோ த அசவேது |
| B. முதலாம் விமலதர்மசூரியன் | E. முல்லேரியா | H. தியாகோத மெல்லோ |
| C. இரண்டாம் இராஜசிங்கன் | F. பலனை | J. கொன்ஸ்தாந்தைன் த சூசா |

**35.** கன்னொறுவைப் போருடன் தொடர்புடைய கண்டி மன்னனையும் போர்த்துக்கேயப் படைத் தளபதியையும் குறிப்பிடும் விடை எது?

(1) A, H (2) B, J (3) C, G (4) C, H

**36.** முதலாம் விமலதர்மசூரிய மன்னன் போர்த்துக்கேயருடன் போரிட்ட இடமும் அப்போது போர்த்துக்கேய படையை நடாத்திச் சென்ற தளபதியையும் குறிப்பிடும் விடை எது?

(1) D, G (2) D, J (3) E, J (4) F, G

- பின்வரும் A, B என்ற கூற்றுக்களைக் கொண்டு **37** ஆம் வினாவுக்கு விடை தருக.

A - அடிப்படை மனித உரிமைகள் பற்றி உலகம் முழுவதும் ஆர்வம் ஏற்பட்டமை

B - உலகில் முதன்முதலில் எழுதப்பட்ட அரசியல் யாப்பு உருவாக்கப்பட்டமை

**37.** பிரான்சிய புரட்சி தொடர்பில்

(1) A, B உண்மையானவை (2) A, B பொய்யானவை

(3) A உண்மையானது B பொய்யானது (4) A பொய்யானது B உண்மையானது

- பின்வரும் A, B, C, D என்பனவற்றில் கூற்றுக்கள் / சொற்கள் சோடிகளாகத் தரப்பட்டுள்ளன. ஒவ்வொரு கூற்று / சொற் சோடிகளில் முதலாவதுக்கும் இரண்டாவதுக்கும் இடையிலான தொடர்பினைப் பரிசீலித்து **38** தொடக்கம் **40** வரையான வினாக்களுக்கு விடை தருக.

A - 1. ஐந்து மாகாணங்களாக இலங்கை பிரிக்கப்படுதல்
 2. கோல்புறூக் கமரன் சீர்திருத்தம்

B - 1. மனிங் அரசியல் சீர்திருத்தம்
 2. சட்டவாக்கக் கழகம் அறிமுகம்

C - 1. ஆளுநர் பதவி
 2. 1972 அரசியல் யாப்பு

D - 1. 1978 அரசியல் யாப்பு
 2. விகிதாசாரப் பிரதிநிதித்துவம்

**38.** முதலாவதை இரண்டாவதின் விளைவாகக் குறிப்பிடும் சோடி எது?

(1) A (2) B (3) C (4) D

**39.** முதலாவதின் மூலம் இரண்டாவது அறிமுகமான சோடி எது?

(1) A (2) B (3) C (4) D

**40.** இரண்டாவது செயற்படுத்தப்பட்டதோடு முதலாவது நீக்கப்பட்டதைக் குறிப்பிடும் சோடி எது?

(1) A (2) B (3) C (4) D

* * *

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்

අ.පො.ස (සා.පෙළ) විභාගය / க.பொ.த. (சாதாரண தர)ப் பரீட்சை - 2021(2022)

| විෂය අංකය<br>பாட இலக்கம் | 33 | විෂයය<br>பாடம் | வரலாறு |
|---|---|---|---|

ලකුණු දීමේ පටිපාටිය / புள்ளி வழங்கும் திட்டம்
I පත්‍රය /பத்திரம் I

| ප්‍රශ්න අංකය<br>வினா இல. | පිළිතුරු අංකය<br>விடை இல. | ප්‍රශ්න අංකය<br>வினா இல. | පිළිතුරු අංකය<br>விடை இல. | ප්‍රශ්න අංකය<br>வினா இல. | පිළිතුරු අංකය<br>விடை இல. | ප්‍රශ්න අංකය<br>வினா இல. | පිළිතුරු අංකය<br>விடை இல. |
|---|---|---|---|---|---|---|---|
| 01. | 2 | 11. | 3 | 21. | 1 | 31. | 4 |
| 02. | 1 | 12. | 3 | 22. | 4 | 32. | 3 |
| 03. | 4 | 13. | 2 | 23. | 2 | 33. | 1 |
| 04. | 2 | 14. | 1 | 24. | 2 | 34. | 4 |
| 05. | 2 | 15. | 1 | 25. | 3 | 35. | 4 |
| 06. | 2 | 16. | 3 | 26. | 2 | 36. | 4 |
| 07. | 3 | 17. | 3 | 27. | 3 | 37. | 3 |
| 08. | 4 | 18. | 1 | 28. | 2 | 38. | 1 |
| 09. | 1 | 19. | 4 | 29. | 2 | 39. | 4 |
| 10. | 3/4 | 20. | 3 | 30. | 1 | 40. | 3 |

- විශේෂ උපදෙස් / விசேட அறிவுறுத்தல் :

එක් පිළිතුරකට / ஒரு சரியான விடைக்கு 01 ලකුණු බැගින් / புள்ளி வீதம்

මුළු ලකුණු / மொத்தப் புள்ளிகள் 1 x 40 = 40

# வரலாறு II

## பகுதி I

1. (அ) (i) கீழே தரப்பட்டுள்ள வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த இடங்கள் எல்லாவற்றையும் வழங்கப்பட்டுள்ள இலங்கைப் புறவுருவப் படத்தில் குறித்துப் பெயரிடுக.

காலதித்த, நாச்சத்துவ வாவி, மாணிக்க கங்கை, பொலன்னறுவை, கன்னொறுவ, தேவேந்தர, கந்தரோடை (கந்துருகொட), சொரபொர வாவி, கோகண்ண, கலா ஓயா, சிலாபம், கோட்டை (12 புள்ளிகள்)

(ii) கீழே தரப்பட்டுள்ள வரலாற்று இடங்கள் அனைத்தையும் வழங்கப்பட்டுள்ள பகுதி உலகப் புறவுருவப் படத்தில் குறித்துப் பெயரிடுக.

வங்காள விரிகுடா, தாய்வான், உரோமாபுரி, போர்த்துக்கல், இலண்டன், செங்கடல் (06 புள்ளிகள்)

(ஆ) (i) கீழே *A*, *B*, *C*, *D* எனத் தரப்பட்டுள்ள வினாக்களுக்குரிய விடைகளை ஒழுங்குமுறைப்படி உங்கள் விடைத்தாளில் எழுதுக.

*A* - கலிகால சாஹித்திய சர்வக்ஜ பண்டிதர் என்ற பட்டப் பெயரைப் பெற்ற மன்னரைக் குறிப்பிடுக.

*B* - இலங்கையில் பௌத்த பாடசாலைகளை அமைப்பதில் முன்னோடிப் பணியை மேற்கொண்ட வெளிநாட்டு இனத்தவர் யார்?

*C* - முதலாம் உலக மகா யுத்தத்தின் பின்னர் தோல்வியடைந்த ஜெர்மனியுடன் கைச்சாத்திடப்பட்ட ஒப்பந்தம் எது?

*D* - அணிசேரா நாடுகள் அமைப்பினைத் தாபிப்பதற்கு முன்னின்ற இந்தியப் பிரதம மந்திரியின் பெயரைக் குறிப்பிடுக. (04 புள்ளிகள்)

- *A*, *B* என்பவற்றில் காட்டப்பட்டுள்ள படங்களை அவதானித்து கேட்கப்பட்டுள்ள வினாக்களுக்குரிய விடைகளை வினா இலக்க ஒழுங்குமுறைப்படி உங்கள் விடைத்தாளில் எழுதுக.

(ii) 1. உரு *A* இல் காட்டப்பட்டுள்ள மன்னனின் பெயரைக் குறிப்பிடுக

2. மன்னராகுவதற்கு முன்னர் இவருக்கு வழங்கப்பட்ட பெயர் யாது?

3. இந்த மன்னனுக்குரிய அரச வம்சம் எது?

4. இவரினால் தலதா மாளிகைத் தொகுதியுடன் இணைக்கப்பட்ட கலையம்சம் கொண்ட ஆக்கத்தைக் குறிப்பிடுக. (04 புள்ளிகள்)



*A*

(iii) 1. உரு *B* இல் காட்டப்பட்டுள்ள சித்திரத்தினால் குறிப்பிடப்படுபவர்கள் யாவர்?

2. இந்த சித்திரம் வரையப்பட்டுள்ள தேவாலயத்தின் பெயரைக் குறிப்பிடுக.

3. இந்த சித்திரத்தை வரைந்த சித்திரக் கலைஞரைக் குறிப்பிடுக.

4. இந்தச் சித்திரம் எந்தக் காலத்துக்கு உரியதாகும்? (04 புள்ளிகள்)



*B*

උත්තර පත්‍ර පරීක්ෂකවරුන්ගේ ප්‍රයෝජනය සඳහා පමණි

098479

OL/2021(2022)/33/STE-II



ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

**33 STE II**

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2021(2022)
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2021(2022)
**General Certificate of Education (Ord. Level) Examination, 2021(2022)**

ඉතිහාසය II
வரலாறு II
**History II**

1. (අ) (i)
1. (அ) (i)
1. (a) (i)

විභාග අංකය
சுட்டெண்
Index No. } ..........................




[ඊළඟ පිටුව බලන්න / மறுபக்கம் பார்க்க / See next page

1. அ.

(i) இடம் குறித்தல் 1 × 12 = 12 புள்ளிகள்

(ii) இடம் குறித்தல் 1 × 6 = 06 புள்ளிகள்

ஆ.

(i) A - இரண்டாம் பராக்கிரமபாகு

B - ஹென்றி ஸ்ரீல் ஒல்கொட் / ஒல்கொட்

C - வெர்சல்ஸ் / வெர்சாய் உடன்படிக்கை

D - ஜவஹர்லால் நேரு / ஸ்ரீஜவஹர்லால் நேரு / நேரு

**(01 X 4 = 04 புள்ளிகள்)**

(ii) 1. ஸ்ரீவிக்கிரம ராஜசிங்கன் / விக்ரம இராஜசிங்கன்.

2. கண்ணுசாமி

3. நாயக்கர்

4. பத்திரிப்பு / எண்கோண மண்டபம்

**(01 X 4 = 04 புள்ளிகள்)**

(iii) 1. தேவதூதர்கள் / தேவதரு

2. சிஸ்ரைன் தேவாலயம்

3. மைக்கல் ஆஞ்சலோ / ரபாயல்

4. மறுமலர்ச்சிக் காலம் **(01 X 4 = 04 புள்ளிகள்)**

# பகுதி II

## 02. தேர்ச்சி மட்டம்

- வரலாற்றுக்கு முற்பட்டகால மனிதர்களின் வாழ்விடங்களைப் பெயரிடுவர்
- வரலாற்றுக்கு முற்பட்ட கால மனிதனின் வாழ்க்கை முறைபற்றி விளக்குவர்
- வரலாற்க்கு முற்பட்ட காலம், முன்வரலாற்றுக்காலம் என்பவற்றுக்கிடையிலான வேறுபாட்டை இனங்காண்பர்
- ஆரம்ப வரலாற்றுக் காலத்தின் குடியிருப்புக்கள் பற்றி விளக்குவர்

2. (i) இலங்கையில் வரலாற்றுக்கு முற்பட்ட மனிதன் வசித்த சுற்றாடல் வலயங்கள் மூன்றின் பெயர்களைக் குறிப்பிடுக. (03 புள்ளிகள்)

(ii) வரலாற்றுக்கு முற்பட்ட மனிதனின் வாழ்க்கை முறையில் காணக்கூடிய பண்புகள் இரண்டினைக் குறிப்பிடுக. (04 புள்ளிகள்)

(iii) இலங்கையில் முன் வரலாற்றுக் காலத்தை வரலாற்றுக்கு முற்பட்ட காலத்திலிருந்து வேறுபடுத்தி இனங்காணக்கூடிய விடயங்கள் இரண்டினை விவரிக்குக. (05 புள்ளிகள்)

(iv) ஆரம்ப வரலாற்றுக் காலத்துக்குரிய குடியிருப்புக்களின் கட்டமைப்பையும் தன்மையையும் மூன்று விடயங்களைக் கொண்டு விவரிக்குக. (06 புள்ளிகள்)

(i)
- அரைவறள் வலயம்
- தாழ்நில உலர்வலயம்
- தாழ்நில இடைஉலர்வலயம்
- ஈரவலயம்
- மலைநாட்டு இடை உலர்வலயம்
- வறள் வலயம்
- தாழ்நில ஈரவலயம்
- தாழ்நில இடைவலயம்
- மலை நாட்டு ஈரவலயம்
- உயர் மலைநாட்டு ஈரவலயம்
- தாழ்நில வரள் வலயம்

**(01 X 3 = 03 புள்ளிகள்)**

(ii)
- விலங்குகளை வேட்டையாடியமை
- உணவிற்காக இயற்கைப் பொருட்களை சேகரித்தமை
- நாடோடி வாழ்க்கை முறையை மேற்கொண்டமை
- மழைக் காலங்களில் கற்குகைகளிலும் வெப்பமான காலங்களில் வெட்ட வெளிகளிலும் வாழ்ந்தமை
- சிறு குழுக்களாக வாழ்ந்தமை
- இறந்தவர்களுக்கு மரணச் சடங்குகளைப் பின்பற்றியமை, அவர்கள் வாழ்ந்த குகைகளிலேயே உடல்களை குழிதோண்டிப் புதைத்தமை
- சூழலுக்கேற்ப உணவு வகைகள் தீர்மானிக்கப்பட்டமை

**(02 X 2 = 04 புள்ளிகள்)**

(iii)
- சுடப்பட்ட மட்பாண்டங்களைப் பயன்படுத்தியமை
- முறையான மரணச் சடங்கு முறைகள் பின்பற்றப்பட்டமை
- இரும்பு உலோகத்தினைப் பயன்படுத்தியமை
- நிரந்தரமான குடியிருப்புக்கள் அமைக்கப்பட்டமை (நிலையான வசிப்பிடம்)
- விவசாயம் செய்ய ஆரம்பிக்கப்பட்டமை

**(02 + 03 = 05 புள்ளிகள்)**

(iv) - சிறியகுளங்களைக் கொண்ட குடியிருப்புக்கள் அமைக்கப்பட்டமை (வாவிகாம)

- நதிக் கரையோரங்களுக்கப்பால் குடியேற்றங்கள் நிறுவப்பட்டமை

- பல்வேறு தொழில்களை அடிப்படையாகக் கொண்ட குடியிருப்புக்கள் உருவாக்கப்பட்டமை

- செயற்பாடுகளின் அடிப்படையில் அமைந்த குடியேற்றங்கள் தோற்றம் பெற்றமை.

- இயற்கை வளங்களை இலகுவாகப் பெற்றுக்கொள்ளக்கூடிய இடங்களில் குடியேற்றங்கள் அமைக்கப்பட்டமை.

- இரு வேறுபட்ட முறையில் கிராமங்கள் பாதுகாக்கப்பட்டமை.
  பரிஹித்தகம - அபரிஹித்தகம

- நகரம், கிராமம், புரம் என்ற அடிப்படையில் குடியிருப்புகள் காணப்பட்டமை

- பெரிய நகரக் குடியிருப்பு புரம் என அழைக்கப்பட்டமை

- பரப்பளவில் வேறுபட்ட குடியிருப்புக்கள் அமைந்திருந்தமை.
  - சிறிய அளவு கிராமங்கள் - 0.15 ஹெக்டேயர்
  - பெரிய கிராமம் - 2 ஹெக்டேயர்
  - நகரக் குடியிருப்பு - 2 ஹெக்டேயருக்கு மேல்

- சனத்தொகை அளவில் வேறுபட்ட குடியிருப்புகள் காணப்பட்டமை
  - சிறு கிராமம் - 5,6 குடும்பங்கள்
  - பெரிய கிராமம் - 30 குடும்பங்கள்
  - நகரங்கள் - 35,000 பேருக்கு மேல்

- கிராமத் தலைவர்கள் 10 பேர் கொண்ட சபை மூலம் கிராமப் பிரச்சினைக்கு தீர்வு காணல். **(03 + 03 = 06 புள்ளிகள்)**

- கிராம தலைவர்களினால் கிராமம் நிர்வகிக்கப்பட்டமை.

## 03. தேர்ச்சி மட்டம்

- புராதனகால இலங்கையின் நிர்வாகத்தில் காணப்பட்ட பதவிப் பெயர்களை குறிப்பிடுவர்
- வரலாற்று நிகழ்ச்சியுடன் தொடர்புடைய மன்னர்களைப் பெயரிடுவர்
- இலங்கையின் புராதன காலத்தில் ஆட்சியாளர்கள் வெளிநாடுகளுடன் கொண்டிருந்த தொடர்புகளை விளக்குவர்

**3.** (i) புராதன இலங்கையில் பின்வரும் நபர்களைக் குறிப்பிடும் பதவிப் பெயர்களை ஒழுங்குமுறைப்படி எழுதுக.

*A* - குடும்பத்தின் தலைவன்

*B* - கிராமத் தலைவன்

*C* - குறு நில அலகு ஒன்றைப் பரிபாலனம் செய்த பெண்மணி (03 புள்ளிகள்)

(ii) கீழே குறிப்பிடப்பட்டுள்ள வரலாற்று நிகழ்ச்சிகளுடன் தொடர்புடைய மன்னர்களை ஒழுங்குமுறைப்படி குறிப்பிடுக.

*A* - அனுராதபுரத்தை திட்டமிடப்பட்ட நகரமாக்குதல்

*B* - ஸ்ரீ மகாபோதி (வெள்ளரசு) மரக்கிளையை நடுதல்

*C* - மின்னேரியா வாவியைக் கட்டுதல்

*D* - பொலன்னறுவையை சோழர் ஆட்சியிலிருந்து விடுவித்தல் (04 புள்ளிகள்)

(iii) வசப மன்னனின் ஆட்சிக் காலத்தின் முக்கியத்துவத்தை இரண்டு விடயங்கள் கொண்டு விவரிக்குக. (05 புள்ளிகள்)

(iv) அனுராதபுரம், பொலன்னறுவை ஆகிய இராசதானிகளின் அரசர்கள் வெளிநாடுகளுடன் தொடர்புகள் கொண்டிருந்த விதத்தினை மூன்று உதாரணங்கள் கொண்டு விவரிக்குக. (06 புள்ளிகள்)

(i) A – கிருகபதி / கஹபதி / குர்ஷகபதி

B – கிராமிக / கமிக / கிராமபோஜக / கமமனி / கம்போஜக

C – பருமகலு / ரு

**(01 X 3 = 03 புள்ளிகள்)**

(ii) A – பண்டுகாபய மன்னன்

B – தேவநம்பியதிச மன்னன் / தேவநம்பிய

C – மகாசேனன்

D – முதலாம் விஜயபாகு / மகாவிஜயபாகு

**(01 X 4 = 04 புள்ளிகள்)**

(iii)
- புதிய அரச வம்சத்தின் முதல் மன்னன்
- முழு நாட்டையும் ஒன்றுபடுத்தி ஆட்சி செய்தான்
- உள்நாட்டு நிர்வாகத்தை அதிகாரிகளைக் கொண்டு முறைப்படி ஒழுங்கமைத்தான்
- ஆட்சிப் பிரதேசங்களை நிர்வாக மாவட்டங்களாகப் பிரித்து நிர்வாகம் செய்தான்
- வரி அறவீட்டு முறையினை முறைமைப்படுத்தினான்
- பாரிய குளங்களைக் கட்டுவதில் முன்னோடியாக இருந்தான்
- நாட்டின் தேசிய வருமானத்தை அதிகரித்துக் கொள்வதற்கு நடவடிக்கை மேற்கொண்டான்
- சர்வதேச, பிராந்திய தேவைகளுக்குப் பொருத்தமான நடவடிக்கைகளை எடுத்தான்
- விகாரைகளைப் புனரமைத்ததுடன் புதிதாகவும் அமைத்தான்
- சிறந்தவர் காஸ்யாம் நீர்ப்பாசன முன்மாதிரி மன்னன்

**(02 + 03 = 05 புள்ளிகள்)**

(iv)
- இந்தியாவிலிருந்து கொண்டு வரப்பட்ட பஞ்ச வஸ்துக்களைக் கொண்டு 2வது தடவையாக தேவநம்பியதீசன் முடிசூடிக் கொண்டமை
- அசோகச் சக்கரவர்த்தியால் பயன்படுத்தப்பட்ட தேவநம்பிய என்னும் பட்டத்தைச் சூடிக் கொண்டமை
- மகிந்த தேரரால் பௌத்த சமயம் கொண்டுவரப்பட்டமை
- முதலாம் கஜபாகு பத்தினித் தெய்வகோயில் திறப்பு விழாவிற்கு சேர ராச்சியத்திற்குச் சென்று பங்குபற்றியமை
- பாதிகாபயன், கனிஷ்ட திஸ்ஸ மன்னன் போன்றோர் உரோம நாட்டிற்கு தூதுவர்களை அனுப்பியமை
- ஆறாம் அக்போவின் ஆட்சிக்காலத்தில் சீனாவுடன் வியாபாரத் தொடர்புகளைக் கொண்டிருந்தமை
- திருமணத் தொடர்புகளைக் கொண்டிருந்ததுடன் அயல்நாடுகளுடன் உறவைப் பேணியமை

  உ + ம்: முதலாம் விஜயபாகு தனது சகோதரி மித்தாவை பாண்டிய இளவரசனுக்கு திருமணம் செய்து கொடுத்தமை, முதலாம் விஜயபாகு கலிங்க தேச இளவரசி திரிலோக சுந்தரியை திருமணம் செய்தமை
- அரேபிய நாடுகளுடன் வர்த்தகத் தொடர்பினைக் கட்டியெழுப்பியமை
- தலதாமாளிகையின் பாதுகாப்பிற்காக வேளைக்காரப்படையை நியமித்தமை
- சேனன் - மாணவர்மன்
- அநு/ம் ஓரா/றவை.

**(03 + 03 = 06 புள்ளிகள்)**

(அரசிமல், பொ/ரம், சிமிகம்)

**4. தேர்ச்சி மட்டம்**

- 2ம் நகரமயமாக்கல் காலத்தில் நிலவிய இராசதானிகளைப் பெயரிடுவர்
- 1 ம் நகரமயமாக்கல் நகரங்கள் வீழ்ச்சி அடைவதில் செல்வாக்கு செலுத்திய கரணிகளை குறிப்பிடுவர்
- 2 ம் நகரமயமாக்கல் காலத்தின் பொருளபதார கோலத்தின் இயல்புகளையும், நாட்டை ஒன்றுபடுத்தியவர்களின் சேவைகளையும் குறிப்பிடுவர்

4. (i) இரண்டாவது நகரமயமாக்கல் காலத்தில் நிலவிய இராசதானிகள் மூன்றின் பெயர்களைக் குறிப்பிடுக. (03 புள்ளிகள்)

(ii) முதலாவது நகரமயமாக்கல் காலத்துக்குரிய புராதன நகரங்கள் வீழ்ச்சியடைவதில் செல்வாக்குச் செலுத்திய இரண்டு காரணிகளைக் குறிப்பிடுக. (04 புள்ளிகள்)

(iii) இரண்டாவது நகரமயமாக்கல் காலத்தில் இலங்கையின் பொருளாதாரக் கோலத்தில் காணக்கூடியதாக இருந்த இரண்டு அம்சங்களை விவரிக்குக. (05 புள்ளிகள்)

(iv) சிறந்த ஆட்சியாளன் என்ற வகையில் ஆறாம் பராக்கிரமபாகு மன்னன் ஆற்றிய சேவைகள் மூன்றினை விவரிக்குக. (06 புள்ளிகள்)

(i)
- தம்பதெனிய - ஜம்புதோணி
- யாப்பகுவ - சிபபர்வத
- குருநாகல் - [illegible]
- கம்பளை - லங்காசிறிபுர
- கோட்டை
- யாழ்ப்பாணம்
- சீதாவாக்கை
- றைகம

**(01 X 3 = 03 புள்ளிகள்)**

(ii) - எதிரிகளின் ஆக்கிரமிப்பு
- மத்திய அரச நிர்வாகம் சீர்குலைந்தமை
- வர்த்தகமும் போக்குவரத்தும் தடைப்பட்டமை
- பாதுகாப்பு இல்லாமல் போனமை
- மக்கள் வேறு இடங்கள் நோக்கி புலம்பெயர்ந்தமை
- பலவீனமான மன்னர்கள் ஆட்சிபீடம் ஏறியமை
- பொருளாதாரம் வீழ்ச்சி அடைந்தமை
- கலிங்க மாகனின் படையெடுப்பு
- சோழர் ஆக்கிரமிப்பு

**(02 X 2 = 04 புள்ளிகள்)**

(iii) - விவசாயம் முக்கிய ஜீவனோபாயமாகக் காணப்பட்டமை
- மழைநீரைப் பயன்படுத்தி விவசாயம் செய்யப்பட்டமை
- நீர் பற்றாக்குறையான பிரதேசத்தில் சேனைப்பயிர்ச் செய்கை மேற்கொள்ளப்பட்டமை
- நெல் பிரதான பயிராக செய்கை பண்ணப்பட்டமை
- பொருளாதாரத்தில் வர்த்தகம் முக்கியம் பெற்றமை
- சீனா, இந்தியா, அரேபியா, பாரசீகம், எகிப்து போன்ற நாடுகளுடன் வர்த்தகத் தொடர்புகள் இடம் பெற்றமை
- ஏலம், கறுவா, பாக்கு, சாதிக்காய், மிளகு, முத்து, மாணிக்கம், யானை, யானைத்தந்தம் போன்ற பொருட்கள் ஏற்றுமதி செய்யப்பட்டமை
- சீனாவிலிருந்து மட்பாண்டம் இறக்குமதி செய்யப்பட்டமை..
- உள்நாட்டு வியாபாரம் இடம்பெற்றமை
- வெளிநாட்டு வர்/கம் அரசனின் ஏகபோக உரிமை.
- மேற்கு கரையோர / கிழக்கு கரையோர துறைமுக வர்/கம் மேற்கொள்.

**(02 + 03 = 05 புள்ளிகள்)**

(iv) - கோட்டை இராச்சியத்தின் கீழ் நாடு முழுவதையும் ஒன்றிணைத்தமை
- வன்னிப் பிரதேசத்தை கோட்டை இராச்சியத்தின்கீழ் கொண்டு வந்தமை
- சப்புமல் குமாரனின் தலைமையில் யாழ்ப்பாணத்தை வெற்றி கொண்டமை
- ஜோதிய கிளர்ச்சியை அடக்கியமை
- நாட்டை பொருளாதார ரீதியில் மேம்படுத்தியமை
- பௌத்த சமய மத்திய நிலையங்களை உருவாக்கியமை
- இலக்கிய வளர்ச்சிக்கு உதவியமை

**(03 + 03 = 06 புள்ளிகள்)**

05. தேர்ச்சி மட்டம்

- கண்டி இராச்சியத்திற்கு வழங்கப்பட்ட பெயர்களை குறிப்பிடுவர்
- கண்டி இராச்சிய காலத்தில் இடம்பெற்ற முக்கிய நிகழ்வுகளுடன் தொடர்புடைய நபர்களை குறிப்பிடுவர்
- கண்டி இராசதானி காலத்தில் ஆட்சியாளர்கள் எதிர்நோக்கிய சவால்களையும், அவற்றை முறியடிப்பதற்கு மேற்கொண்ட நடவடிக்கைகள் பற்றிய தகவல்களையும் விளக்குவர்

5. (i) கண்டி இராச்சியத்தைக் குறிப்பதற்குப் பயன்படுத்திய மூன்று பெயர்களைக் குறிப்பிடுக. (03 புள்ளிகள்)

(ii) கீழே *A* - *D* வரை உள்ள கூற்றுக்களுக்குப் பொருத்தமான விடையை அடைப்புக்குறிக்குள் இருந்து தெரிவுசெய்து ஒழுங்குமுறைப்படி எழுதுக.

*A* - கண்டி இராச்சியத்தின் முதலாவது ஆட்சியாளன்

*B* - கண்டி இராச்சியத்தை ஆக்கிரமிப்பதற்கு சீதாவாக்கை இராஜசிங்க மன்னனுக்கு உதவி வழங்கிய பிரதானி

*C* - தோனா கதரினா என்ற பெயரில் ஞானஸ்நானம் பெற்ற இளவரசி

*D* - கி. பி. 1766 இல் ஒல்லாந்தருடன் உடன்படிக்கை செய்து கொண்ட மன்னன்

(கரலியத்த பண்டார, கீர்த்தி ஸ்ரீ இராஜசிங்கன், குசுமாசன தேவி, வீரசுந்தர பண்டார சேனா சம்மத விக்கிரமபாகு, சமுத்திராதேவி, ஸ்ரீ விஜய இராஜசிங்கன், ஜயவீர பண்டார) (04 புள்ளிகள்)

(iii) இரண்டாம் இராஜசிங்கன் தனது ஆட்சிக் காலத்தில் எதிர்நோக்கிய சவால்கள் இரண்டினைக் குறிப்பிட்டு அவற்றுள் ஒன்றில் வெற்றி பெறுவதற்காக மேற்கொண்ட நடவடிக்கையைச் சுருக்கமாக விவரிக்குக. (05 புள்ளிகள்)

(iv) கண்டி இராச்சியத்தின் நிர்வாக நடவடிக்கைகள் ஒழுங்கமைக்கப்பட்டிருந்த விதத்தினை மூன்று விடயங்களைக் கொண்டு விளக்குக. (06 புள்ளிகள்)

(i)
- செங்கடகல நகரம்
- மலைநாட்டு இராச்சியம்
- கண்டி இராச்சியம்
- கந்தநுவர
- பஞ்சமலைநாடு (கந்த உடபஸ்ரட்ட)

ஸ்ரீ வர்த்தனபுர , மகநுவர

**(01 X 3 = 03 புள்ளிகள்)**

(ii)
A - சேனாசம்பத விக்கிரமபாகு

B - வீரசுந்தர பண்டார

C - குசுமாசன தேவி

D - கீர்த்தி ஸ்ரீ ராஜசிங்கன்

**(01 X 4 = 04 புள்ளிகள்)**

(iii)
- கண்டி இராச்சியத்தின் மீதான போர்த்துக்கேயரின் தாக்குதலை முறியடித்தமை
- மகா ஆஸ்தான குமாரனாக ரந்தனிவெல போரில் போர்த்துக்கேயரைத் தோற்கடித்தமை. மன்னனாகக் கன்னொறுவப் போரில் போர்த்துக்கேயரைத் தோற்கடித்தமை
- போர்த்துக்கேயரை இந்நாட்டில் இருந்து வெளியேற்றுவதற்கு ஒல்லாந்தரின் உதவியைப் பெற்றுக் கொண்டமை
- கண்டி இராச்சிய பிரபுக்களிடம் இருந்து ஏற்பட்ட அச்சுறுத்தல்களைக் கட்டுப்படுத்தியமை

- பிரதானிகளின் அதிகாரத்தைக் கட்டுப்படுத்தி அரச நிர்வாகத்தை நடத்தியமை
- ஒல்லாந்தரின் ஆதிக்கத்தில் இருந்து கண்டி இராச்சியத்தினை பாதுகாத்துக் கொண்டமை
- ஒல்லாந்தர் கைப்பற்றிய பிரதேசங்களை மீண்டும் கைப்பற்றி கண்டி இராச்சியத்துடன் இணைத்துக் கொண்டமை

**(02 + 03 = 05 புள்ளிகள்)**

(iv)
- நிர்வாக ஒழுங்கமைப்பின் தலைவன் மன்னனாவான்
  - ♦ நாட்டில் அமைதியையும், பாதுகாப்பையும் ஏற்படுத்துதல் அரசனின் முக்கிய பணியாகும்
- நிர்வாக நடவடிக்கைகளுக்கு அரசனுக்கு உதவுவதற்கு பிரதானிகள் இருவர் இருந்தனர்
  - ♦ மகா அதிகாரம் , இரண்டாவது அதிகாரம்
  - ♦ பிரதானிகள், திசாவைகள், தலைமைச் செயலாளர்கள், பிரதேச செயலாளர்கள்
- அரச மாளிகையின் சேவை செயற்பாடுகள்
  - ♦ அரச மாளிகையின் நிர்வாக செயற்பாடுகள் அதிகாரிகள் மூலம் நடத்தப்பட்டது
  - ♦ அரசனின் நேரடி கண்காணிப்பின் கீழ் இது இடம்பெற்றது
- ரட்டவசம எனும் பிரதேச நிர்வாகம்
  - ♦ ரட்டைகள், திசாவைகள், கோறளைகள், பற்றுக்கள் என நிர்வாகம் செய்யப்பட்டது
- வரி ஒழுங்கமைப்பு
  - ♦ திசாவையில் தொழில், குலம் அடிப்படையில் வேறுவேறாக வரி ஒழுங்கமைக்கப்பட்டிருந்தது
    உ + ம்: மடிகேபத்த (போக்குவரத்துக்கான வரி)
    குருகேபத்த (யானை பிடிப்பதற்கான வரி.. போன்றவை)
- விகாரைகள், தேவாலயங்களின் நிர்வாக நடவடிக்கை
- நீதிமன்ற செயற்பாடுகள்
  - ♦ உயர்ந்த நீதி அதிகாரம் மன்னரிடம் இருந்தது
  - ♦ அதிகாரிகளின் பதவிக்கேற்ப நீதி அதிகாரம் இருந்தது
  - ♦ தண்டனை முறைகள் பல காணப்பட்டமை
    உ + ம்: கன்னத்தில் அறைதல்

**(03 + 03 = 06 புள்ளிகள்)**

**06. தேர்ச்சி மட்டம்**

- பிரித்தானியர் இலங்கையில் அதிகாரத்தை நிலைநாட்ட முன்னர் வருகைதந்த பிரித்தானிய தூதுவர்களின் பெயர்களைக் குறிப்பிடுவர்
- இலங்கையில் கரையோரப் பிரதேசங்களில் இடம்பெற்ற கிளர்ச்சி தொடர்பாக முன்வைத்த ஆலோசனைகளைக் குறிப்பிடுவர்
- பிரித்தானியர் கண்டி இராச்சியத்தை கைப்பற்றுவதற்கு ஏதுவாக அமைந்த காரணிகளைக் குறிப்பிடுவர்
- 1848 சுதந்திர போராட்டத்தில் செல்வாக்குச் செலுத்திய காரணிகளை விளக்குவர்

**6.** (i) இலங்கையின் கரையோரப் பிரதேசங்களை பிரித்தானியர்கள் கைப்பற்றுவதற்கு முன்னர் இந்நாட்டுக்கு வருகை தந்த பிரித்தானிய தூதுவர்கள் மூவரின் பெயரினைக் குறிப்பிடுக. (03 புள்ளிகள்)

(ii) கி. பி. 1797 இல் கரையோரப் பிரதேசங்களில் ஏற்பட்ட கலகங்கள் பற்றி ஆராய்ந்து பார்த்த மியூரன் ஆணைக்குழுவின் இரண்டு பரிந்துரைகளைக் குறிப்பிடுக. (04 புள்ளிகள்)

(iii) பிரித்தானியர்கள் கண்டி இராச்சியத்தைக் கைப்பற்றுவதற்கு ஏதுவாக அமைந்த இரண்டு விடயங்களை விவரிக்குக. (05 புள்ளிகள்)

(iv) கி. பி. 1848 இல் பிரித்தானியருக்கு எதிரான சுதந்திரப் போராட்டம் ஏற்படுவதில் செல்வாக்குச் செலுத்திய மூன்று காரணிகளை விவரிக்குக. (06 புள்ளிகள்)

(i)
- ஜோன் பைபஸ்
- ஹியு பொயிட்
- றொபட் அன்ரூஸ்

**(01 X 3 = 03 புள்ளிகள்)**

(ii)
- வரி வசூலிப்பதில் ஈடுபட்டிருந்த சென்னை உத்தியோகத்தர்கள் திருப்பி அனுப்பப்பட்டு அவர்களுக்குப் பதிலாக உள்ளூர் அதிகாரிகள் நியமிக்கப்பட வேண்டும்.
- தென்னை வரி உட்பட புதிய வரிகள் நீக்கப்பட வேண்டும்.
- வரி வசூலிப்பதற்கும், நீதி மன்ற நடவடிக்கைகளுக்கும் வெவ்வேறு உத்தியோகத்தர்கள் நியமிக்கப்பட வேண்டும்.
- ஒல்லாந்தரின் நீதிமன்ற முறையை மீண்டும் உருவாக்க வேண்டும்
- சென்னை உத்தியோகத்தர், சுதேசிகள்

**(02 X 02 = 04 புள்ளிகள்)**

(iii)
- நாட்டின் மத்தியில் சுதந்திர அரசு இருந்தமை பிரித்தானிய ஆட்சிக்குத் தடையெனக் கருதியமை
- உள்ளக எல்லைகளையும் கரையோரப் பிரதேசங்களையும் பாதுகாப்பதற்கு அதிகளவு செலவு செய்யப்பட வேண்டியிருந்தமை
- கரையோரப் பிரதேச கலகங்களுக்கு கண்டி மன்னன் உதவியமை
- நடைவரி.
- கரையோரப் பிரதேச மக்கள் கண்டி மன்னனையே தமது மன்னனாகக் கருதியமை
  ஜோன்டொயில தந்திரம்
- கொழும்பிலிருந்து திருகோணமலைக்கான தரைவழிப்பாதை அமைப்பதற்கான தேவை பிரித்தானியருக்கு இருந்தமை
  பிரதானி இராசசிங்கனின் நடவடிக்கை --
- ஏனைய ஐரோப்பிய இனத்தவரின் உதவியை கண்டி மன்னன் பெறலாம் என சந்தேகித்தமை

**(02 + 03 = 05 புள்ளிகள்)**

(iv) - கோல்புறூக் சீர்திருத்தத்தின் தாக்கம்

- ♦ அரச நிலக் கொள்கை
- ♦ கிராமசபை செயலிழந்தமை
- ♦ புதிய நீதிமன்ற முறை

- அரசனுக்கும் மக்களுக்கும் இடையிலான தொடர்பு விலகிச் சென்றமை

    - ♦ சிவில் சேவையாளர் தொகையைக் குறைத்தமை நிர்வாக அதிகாரிகளின் நிர்வாகப் பிரதேசம் பரந்ததாக இருந்தமையால் அதனை நிர்வகிக்கவும் மேற்பார்வை செய்வதும் சிரமமாக இருந்தமை

- அதிகாரிகள் சிலர் பெருந்தோட்டப் பயிர்ச்செய்கையில் கூடிய கவனம் செலுத்தியமையால் பொதுமக்களின் தேவைகளைக் கண்டறிய முடியாதிருந்தமை

- அரசின் புதிய வரிக் கொள்கை

- கோப்பிச் செய்கையால் மக்கள் நிலங்களை இழந்தமையால் விவசாய நடவடிக்கைகள் தடைப்பட்டமை

- நீலப் புத்தகத்திற்காக புள்ளிவிபர தகவல் சேகரித்தமையால் மக்களிடையே சந்தேகம் ஏற்பட்டமை

- பௌத்தசமயம் தொடர்பாக இதுவரை வழங்கிய பாதுகாப்பினை ஆங்கிலேயர் நீக்கியமை

- நிலங்களை தொ/வு செய்ய ஊக்கப்படுத்தியமை.

**(03 + 03 = 06 புள்ளிகள்)**

**07. தேர்ச்சி மட்டம்**

- சுதந்திரத்திற்கு முன்னர் தோன்றிய அரசியல் கட்சிகளைப் பெயரிடுவர்
- கி.பி 1956 இல் இலங்கையில் ஆட்சிக்கு வந்த அரசு அறிமுகப்படுத்திய அரசியல் சீர்திருத்தங்கள் பற்றிக் குறிப்பிடுவர்
- 1978 யாப்பிற்கமைய ஜனாதிபதியின் அதிகாரங்களைக் குறிப்பிடுவர்
- சுதந்திரத்தின் பின் முதல் மூன்று தசாப்பதங்களில் இலங்கையின் சமூக நலன்புரி விடயங்களை அபிவிருத்தி செய்வதற்கு மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கைகளை விளக்குவர்

7. (i) சுதந்திரத்துக்கு முன்னர் இலங்கையில் தோன்றிய அரசியல் கட்சிகள் மூன்றினைக் குறிப்பிடுக. (03 புள்ளிகள்)

(ii) கி. பி. 1956 இல் இலங்கையின் அதிகாரத்துக்கு வந்த அரசாங்கம் அறிமுகப்படுத்திய இரண்டு சீர்திருத்தங்களைக் குறிப்பிடுக. (04 புள்ளிகள்)

(iii) 1978 அரசியல் யாப்பிற்கு அமைய நிறைவேற்று அதிகார ஜனாதிபதி பெற்றிருந்த இரண்டு அதிகாரங்களைச் சுருக்கமாக விளக்குக. (05 புள்ளிகள்)

(iv) சுதந்திரத்தின் பின்னர் முதல் மூன்று தசாப்தங்களில் இலங்கையில் சமூக நலன்புரி நடவடிக்கைகளை முன்னேற்றுவதற்கு எடுக்கப்பட்ட மூன்று நடவடிக்கைகளை விளக்குக. (06 புள்ளிகள்)

(i)
- தொழிலாளர் கட்சி
- லங்கா சமசமாசக் கட்சி , NSP
- இலங்கை கமியூனிசக் கட்சி
- ஐக்கிய தேசியக் கட்சி UNP
- தமிழ் காங்கிரஸ் கட்சி
- போல்ஷவிக் – லெனினிஸ்ட் கட்சி
- இலங்கை இந்திய காங்கிரஸ் கட்சி

**(01 X 3 = 03 புள்ளிகள்)**

(ii)
- சிங்கள மொழியை அரச கரும மொழியாக்கியமை
- பிரித்தானியருடன் செய்து கொள்ளப்பட்ட பாதுகாப்பு மற்றும் வெளிவிவகார ஒப்பந்தங்களை இரத்துச் செய்தமை
- துறைமுகம், போக்குவரத்து நடவடிக்கைகள் அரச உடைமையாக்கப்பட்டமை
- பிரிவேனாக்களை பல்கலைக்கழகங்களாகத் தரமுயர்த்தியமை
- உயர்தஸ்தாக்கோக. ஊத்யோகப்பரிஹரவனா.

**(02 X 02 = 04 புள்ளிகள்)**

(iii) - சட்டத்துறை அதிகாரங்கள்

- பாராளுமன்றத்தைக் கூட்டுதல்
- பொதுத் தேர்தலை அடுத்துவரும் முதலாவது அமர்விற்கு தலைமை தாங்குதல்
- பாராளுமன்றத்தைக் கலைத்தல் ....

- நிறைவேற்று அதிகாரங்கள் - அமைச்சரவை தலைமை ... அமைச்சரவைக்கு தலைமை தாங்கு

- பிரதம மந்திரி உட்பட ஏனைய அமைச்சர்களை நியமித்தல்
- அமைச்சர்களுக்கு உரிய அமைச்சுப் பொறுப்புக்களை வழங்குதல் ...

சர்வஜன வாக்கில் நாட்டை மதிப்பு
குற்றவாளிகளுக்கு மன்னிப்பு
தண்டனை குறைத்தல்
நீதிச்சேவை ஆணைக்குழு நியமனம்

- நீதித்துறை அதிகாரம்
    - பிரதம நீதியரசரை நியமித்தல்
    - உயர் நீதிமன்ற நீதிபதிகளை நியமித்தல்

- அரச தலைவர் என்ற வகையில் அதிகாரம்
    - யுத்தம் சமாதானத்தை பிரகடனப்படுத்துதல்
    - அரச வைபவங்களுக்குத் தலைமை தாங்குதல்

**(02 + 03 = 05 புள்ளிகள்)**

(iv)
- கிராமப் பிரதேசங்களில் கல்வி நடவடிக்கைகளை மேம்படுத்தல்
- வேலைவாய்ப்பைப் பெற்றுக்கொள்வதற்கு திறமை மற்றும் போட்டிப் பரீட்சை முறையைப் பின்பற்றுதல்
- சுதந்திரம், சமத்துவம், அடிப்படை உரிமைகள் என்ற எண்ணக் கருக்களை அரசியல் யாப்பில் உள்ளடக்குதல்
- வீடில்லா பிரச்சனையை தீர்ப்பதற்கு உரிய நடவடிக்கைகளை மேற்கொள்ளல்
- விவசாயம், மீன்பிடி நடவடிக்கைகளுக்கு அரச அனுசரணைகள் வழங்குதல்
- கிராமப் பிரதேசங்களில் சுகாதார சேவைகளை மேம்படுத்தல்
- கிராமப் பிரதேசங்களின் உட்கட்டமைப்பு வசதிகளை மேம்படுத்துதல்
- உணவு மானியம் வழங்குவதைத் தொடர்ந்தும் நடைமுறைப்படுத்துதல்
- போக்குவரத்து, மாடிவீட்டுத் திட்டம்.

**(03 + 03 = 06 புள்ளிகள்)**

EP. BHM 888X

## பகுதி III

**08. தேர்ச்சி மட்டம்**

- கைத்தொழில் புரட்சி பரவிய ஐரோப்பிய நாடுகளைப் பெயரிடுவர்
- கைத்தொழில் புரட்சி பிரித்தானியாவில் முதன்முதலில் தோன்றுவதில் செல்வாக்கு செலுத்திய காரணிகளை குறிப்பிடுவர்
- பிரித்தானியாவில் கைத்தொழில் புரட்சி ஏற்பட்ட காலத்தில் நிலக்கரிக் கைத்தொழில் துறையில் ஏற்பட்ட முன்னேற்றம் பற்றி வளக்குவர்

**8.** (i) பிரித்தானியாவில் ஆரம்பமான கைத்தொழில் புரட்சி பரவிய ஐரோப்பிய நாடுகள் மூன்றின் பெயர்களைக் குறிப்பிடுக. (03 புள்ளிகள்)

(ii) கைத்தொழில் புரட்சி முதலில் பிரித்தானியாவில் ஆரம்பமாவதற்கு செல்வாக்குச் செலுத்திய இரண்டு காரணிகளைக் குறிப்பிடுக. (04 புள்ளிகள்)

(iii) கைத்தொழில் புரட்சிக் காலத்தில் பிரித்தானியாவில் நிலக்கரிக் கைத்தொழிலில் ஏற்பட்ட முன்னேற்றத்தை இரண்டு உதாரணங்களை குறிப்பிட்டு விவரிக்குக. (05 புள்ளிகள்)

(iv) கைத்தொழில் புரட்சியின் விளைவாக உலக பொருளாதாரத் துறையில் ஏற்பட்ட மூன்று மாற்றங்களை விவரிக்குக. (06 புள்ளிகள்)

(i)
- பிரான்ஸ்
- ஜேர்மனி
- பெல்ஜியம்
- ஆஸ்திரியா
- ஹங்கேரி
- பிரஷ்யா

**(01 X 3 = 03 புள்ளிகள்)**

(ii)
- கைத்தொழிலில் முதலீடு செய்யக்கூடிய செல்வந்தர்கள் குழு இருந்தமை
- பிரித்தானியாவில் சனத்தொகை அதிகரித்தமையால் உள்நாட்டு வர்த்தகம் விரிவடைந்தமை
- ஐரோப்பாவில் மறுமலர்ச்சியினால் பெற்ற தொழினுட்ப அறிவு, இயந்திர சாதனங்களை உருவாக்க உதவியமை
- கைத் தொழிலுக்கு தேவையான மூலப் பொருட்களையும் வலுச்சக்தியையும் இலகுவாகப் பெற முடிந்தமை
- குடியேற்ற நாடுகள் பல இருந்தமையால் பரந்த வெளிநாட்டுச் சந்தை நிலவியமை
- நில அடைப்பு இயக்கம் காரணமாக மேலதிக தொழிலாளர்களைப் பெறமுடிந்தமை
- கைத்தொழில், வர்த்தகம் தொடர்பாக மூலதனம் வழங்க வங்கிகளும் நிதி நிறுவனங்களும் தோன்றியமை
- பிரித்தானியாவில் நிலவிய அரசியல் ஸ்திரத்தன்மை
- இலண்டன் நகரம் மூலப் பொருட்களையும் உற்பத்திப் பொருட்களையும், முடிவுப் பொருட்களையும் மூலதனத்தையும் விநியோகிக்கும் மத்திய நிலையமாக விளங்கியமை

**(02 X 02 = 04 புள்ளிகள்)**

(iii) - 1735 ல் தோமஸ் நியுகொமன்ஸ் சுரங்கத்தினுள் சேரும் நீரை வெளியேற்றவும், வெளியில் இருந்து வளியை அனுப்பி சுரங்கத்தை குளிரூட்டக் கூடியதுமான நீராவி இயந்திரத்தைக் கண்டுபிடித்தமை

- 1736 ல் ஜேம்ஸ் வோட் என்பவர் நியுகொமனின் நீராவி இயந்திரத்தை மேலும் விருத்தி செய்து செயற்றிறன் மிக்க நீராவி இயந்திரத்தைக் கண்டுபிடித்தமை

- கி.பி 1812 ல் ஹம்றிடேவியினால் பாதுகாப்பு விளக்கு கண்டுபிடிக்கப்பட்டமையினால் சுரங்கங்களின் வெளிச்சத்தை பெற்றுக்கொள்ள இலகுவாக இருந்தமை

- 1839 ல் இரும்பு கேபிள் கம்பிகள் மூலம் சுரங்கங்களில் இருந்து நிலக்கரியை வெளியே கொண்டுவர முடிந்தமை

- நிலக்கரி கைத்தொழிலால் பல உப கைத்தொழில்கள் விருத்தியடைந்தமை

(02 + 03 = 05 புள்ளிகள்)

(iv) - கைத்தொழில் உற்பத்தி அதிகரித்தமை

- வர்த்தக – வியாபார நடவடிக்கைகள் பொருளாதாரத் துறையில் முக்கியபங்கு வகித்தமை.

- தன்னிறைவு பொருளாதாரம் வீழ்ச்சியடைந்து சம்பளத்திற்கு வேலை செய்யும் தொழிலாளர் வகுப்பு உருவாகியமை

- விவசாய உற்பத்தி நடவடிக்கைகள் கைத்தொழில் மயமாகியமை

- ஏற்றுமதி, இறக்குமதி பொருளாதாரம் விருத்தியடைந்தமை

- வியாபார நடவடிக்கைகளில் முதலீடு செய்யக்கூடிய பல்தேசிய கம்பனிகள் தோற்றம் பெற்றமை

- முதலாளித்துவ பொருளாதாரம் உலகம் முழுவதும் பரவியமை

(03 + 03 = 06 புள்ளிகள்)




VISIT: Past Papers WiKi - Most Extensive Wikipedia of Past Papers

**09. தேர்ச்சி மட்டம்**

- முதலாம் உலக மகா யுத்தத்தில் பங்கு பற்றிய நேச அணியைச் சேர்ந்த நாடுகளைப் பெயரிடுவர்
- முதலாம் உலக மகா யுத்தம் ஏற்பட்டமைக்கான காரணங்களை முன்வைப்பர்
- இரண்டாம் உலக மகா யுத்தத்தின் விளைவாக உலக அரசியலில் ஏற்பட்ட மாற்றங்களை விளக்குவர்
- உலக சமாதானத்தை பாதுகாப்பதற்கு ஐக்கிய நாடுகள் சபை பின்பற்ற வேண்டிய நடைமுறைகளை விளக்குவர்

9. (i) முதலாவது உலக மகா யுத்தம் தொடர்பாக நேச அணிக்குரிய நாடுகள் மூன்றின் பெயர்களைக் குறிப்பிடுக. (03 புள்ளிகள்)

(ii) முதலாம் உலக மகா யுத்தம் ஏற்படுவதில் தாக்கம் செலுத்திய இரண்டு காரணங்களைக் குறிப்பிடுக. (04 புள்ளிகள்)

(iii) இரண்டாம் உலக மகா யுத்தத்தின் விளைவாக உலக அரசியலில் ஏற்பட்ட மாற்றங்கள் இரண்டினை விவரிக்குக. (05 புள்ளிகள்)

(iv) உலக சமாதானத்தைப் பாதுகாப்பதற்கு ஐக்கிய நாடுகள் சபை பின்பற்றக்கூடிய செயற்பாடுகள் மூன்றினை விளக்குக. (06 புள்ளிகள்)

(i)
- பிரான்ஸ்
- பெரிய பிரித்தானியா UK
- ரஷ்யா
- ஐக்கிய அமெரிக்க அரசுகள்

இத்தாலி . கிரேக்கம், கிரீஸ் சேபியா ஜெர்மனியா. 142 page.

**(01 X 3 = 03 புள்ளிகள்)**

(ii)
- ஜேர்மனியை ஐக்கியப்படுத்தும் நடவடிக்கையின்போது பிரான்சும் ஜேர்மனியும் பகைமை நாடுகளாகியமை
- ஜேர்மன் பேரரசனான II ம் வில்லியத்தின் செயற்பாடுகள்
- குடியேற்றங்களை தாபிப்பதில் ஏற்பட்ட போட்டி
- ஆயுதப் போட்டிகளும் இனவாதமும் வளர்ச்சியடைதல்
- ஐரோப்பாவில் பிரான்சை தனிமைப்படுத்துவதற்கு பிஸ்மார்க் பின்பற்றிய வெளிநாட்டுக் கொள்கை
- ஆஸ்திரிய முடிக்குரிய இளவரசன் கொலை செய்யப்பட்டமை -(சரஜிவோ சம்பவம்)

**(02 X 02 = 04 புள்ளிகள்)**

(iii)
- ஏகாதிபத்திய எண்ணக்கரு வீழ்ச்சியடைந்து குடியேற்ற நாடுகள் சுதந்திரம் பெற்றமை
- அழிவிற்குள்ளான, தோல்வியடைந்த ஐரோப்பிய நாடுகளை கட்டியெழுப்புவதற்காக மார்ஷல் திட்டம் செயற்படுத்தப்பட்டமை
- முதலாளித்துவ முகாம், சமவுடைமை முகாம் என இரு அணிகள் தோற்றம் பெற்றமை
- பனிப்போர் இடம் பெற்றமை
- ஐக்கிய நாடுகள் சபை உருவாகியமை
- இரு வல்லரசு முகாம்களிலும் சேராத நாடுகள் ஒன்றிணைந்து அணிசேரா நாடுகள் என்னும் அமைப்பு உருவாக்கப்பட்டமை.
- பிரான்ஸ் பிரி/யா வல்லரசை இழந்து சோவியத் ரஷ்யா USA வல்லரசாகுதல்.

**(02 + 03 = 05 புள்ளிகள்)**

(iv)
- பொருளாதாரத் தடை விதித்தல்
- அணு ஆயுதங்களை குறைக்கவும் அவற்றைக் கட்டுப்படுத்தவும் நடவடிக்கைகள் எடுத்தல்
- சமாதானப் படைகளை அனுப்புதல்
- சமாதானப் பேச்சுவார்த்தைகளில் ஈடுபடுதல்.
- அமைதியான ஆயுதமற்ற அறவழி

**(03 + 03 = 06 புள்ளிகள்)**

ஞஞஞஞஞ